Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE- PAYMENT LICENCE NO G6-TN-MS(C)P.P. 55



**ஆங்கிலம்**

ஆங்கிலத்தை அன்னியமொழி என்றுகருத முடியாது. உலகத் தொடர்புக்கு உகந்தது என்பதால் அதனை விலக்கவும் கூடாது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**நன்றி**

பயன் பெற்றவர்கள் காட்டவேண்டிய கடமைதான் நன்றி என்பது.

தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 14 - 2 - 1984 செவ்வாய் வெளியூர்: 15 - 2 - 1984 புதன் இதழ்: 119

## ஆண்ட்ரபோவ் மறைவு: சட்டசபை ஒத்திவைப்பு

சென்னை, பிப். 14— தமிழக சட்டசபையில் சோவியத் குடியரசு தலைவர் ஆண்ட்ரபோவ்மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் வகையில் முதல்வர் புரட்சித்தலைவர் உரையாற்றினார். பின்னர் சபாநாயகர் ராசாராம் ஆண்ட்ரபோவ் மறைவுக்கு அவை இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது என்று கூறி அவைமுன்னவர் டாக்டர் நாவலர் கொண்டு வந்த தீர்மானத்தை நிறைவேற்றும் வகையில் உறுப்பினர்களை சிலநிமிடம் மௌனமாக எழுந்து நிற்கும்படி கூறினார். 2நிமிட மவுனத்திற்குப்பின் இரங்கல் தீர்மானத்தை அவை முழுமனதாக நிறைவேற்றியது, அதன் பின் அவையை இத்துடன் ஒத்திவைப்பதாக சபாநாயகர் ராசாராம் அறிவித்தார்.

### மேலவையில்

கடந்த 9ம்தேதி யன்று மறைந்த சோவியத் அதிபர் ஆண்ட்ரபோவின் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் தீர்மானத்தைமேலவையில் முன்னவர் அமைச்சர் ஆர். எம். வீ. முன் மொழிந்தார்.

அதைத் தொடர்ந்து திண்டிவனம் ராமமூர்த்தி, சாதிக்பாட்சா, சி. ஆர். லட்சுமிகாந்தன், ப. மாணிக்கம், ஏ. நல்லசிவன், மியாகான், முத்துசாமி ஆகியோர் அனுதாபம் தெரிவித்துப் பேசினர்.

பின்னர் மேலவைத்தலைவர் டாக்டர் ம. பொ. சி. இரங்கல் தெரிவித்துப் பேசினார்.

### ஒத்திவைப்பு

மறைந்த ரஷ்ய அதிபர் ஆண்ட்ரபோவுககு இரங்கல் தெரிவிக்கும் வகையில் இன்றைய நிகழ்ச்சிகள் ஒத்தி வைக்கப்படுவதாக தெரிவித்தார். சபை ஒத்திவைக்கப்பட்டது.

ஆண்ட்ரபோவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் சபை உறுப்பினர்கள் 2 நிமிடம் மவுன அஞ்சலி செலுத்தினர்.

நாளை காலை 9.30 மணிக்கு சபை கூடும்.

### குறுகிய காலத்தில் சிறப்பான சேவை செய்தவர்

# புரட்சிக்கு இலக்கணம் வகுத்த மாபெரும் தலைவர்

## ரஷ்ய ஜனாதிபதி ஆண்ட்ரபோவுக்கு சட்டசபையில் புரட்சித்தலைவர் புகழஞ்சலி

## மறைந்த தலைவருக்கு அனுதாபம் தெரிவித்து சட்டசபை - மேலவை ஒத்திவைப்பு

சென்னை, பிப். 14- "புரட்சிக்கு உண்மையான இலக்கணம் வகுத்த சோவியத் ரஷ்யாவின் மாபெரும் தலைவராக இருந்து குறுகிய காலத்தில் சிறப்பாக பணியாற்றிய, சோவியத் குடியரசின் தலைவர் ஆண்ட்ரபோவின் மறைவு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும்", என சட்டசபையில் முதல்வர் புரட்சித்தலைவர் குறிப்பிட்டார்.

சோவியத் குடியரசின் தலைவர் ஆண்ட்ரபோவ் மறைவுக்கு கொண்டு வரப்பட்ட அனுதாபத் தீர்மானத்தை நிறைவேற்றிய பிறகு, இன்று 14-ந் தேதி சட்டசபை மேலவை ஆகியவை ஒத்திவைக்கப்பட்டன

சோவியத் குடியரசின் தலைவர் யூரி விளாதிமிரோவிச் ஆண்ட்ரபோவ் மறைவு குறித்து தமிழக சட்டப் பேரவையில் இரங்கல் தீர்மானம் ஒன்றை அவை முன்னவரும், நிதியமைச்சருமான டாக்டர் நாவலர் முன்மொழிந்தார்.

தீர்மானத்தை வழிமொழிந்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:—

முன்னவர் கொண்டு வந்த இரங்கல் தீர்மானத்தை நான் வழிமொழிந்து அரசின் சார்பாக எங்கள் கருத்தினை தெரிவிக்கவிரும்புகிறேன். இதற்குமுன்னர்சோவியத் ரஷ்யாவின் தலைவர்கள் மறைந்தபோது இன்றைய தீர்மானத்தின் வடிவத்திலேயேதீர்மானம்சொண்டு வந்திருந்தாலும் இன்று எடுக்கும் நடவடிக்கை போல் இருக்கவில்லை.

### வேதனை படுகிறோம்

புரட்சிக்கு உண்மையான இலக்கணம் வகுத்த சோவியத் ரஷ்யாவின் மாபெரும் தலைவராக இருந்து குறுகிய காலத்தில் தன் பணியை முடிக்க வேண்டிய நிலையில் ஆண்ட்ரபோவ் மறைந்து விட்டார்.

இயற்கை அதற்கு வழி வகுத்து விட்டது கண்டு நாம் வேதனைப்படுகிறோம். குறிப்பாக ஏழெட்டு மாதங்கள் நோய்வாய்ப்பட்டு இருந்த ஒருவர் ஒரு தலைவராக இருந்து உலகம் போற்றும் வகையில் தனது கடமையை செய்தார் என்பது குறிப்பிடத் தக்க ஒன்றுஎன்பதைகுறிப்பிட விரும்புகிறேன்.

உலகத்திலேயே சமதர்மம் தழைத்தோங்கவேண்டும் என்பதை எடுத்து விளக்கும் நாடு சோவியத் குடியரசு என்பதை யாரும் மறுப்பதற்கில்லை. இரண்டாம் உலக யுத்தத்தில் சோவியத்தில் இரண்டு கோடி பேர் இறந்துள்ளார்கள் என்பதை அவை முன்னவர் குறிப்பிட்டார் நான் சோவியத் ரஷ்யாவுக்குச் சென்ற போது சில படங்களைப்பார்த்தேன் ஒரு படத்தை பார்த்த தாய்மார்கள் கண்ணீர் விட்டு விம்மி விம்மி அழுத காட்சியை கண்டவன், கேட்டவன் நான். அந்தக் குடும்பத்தைச்சேர்ந்த யாராவது ஒருவர் தந்தையோ, மகனோ, தனயனோ யாராவது ஒருவர் யுத்தத்தில் இறந்திருக்கிறார் என்பதை அந்தப்படத்திலே காணமுடிந்தது. அந்தக்குடும்பத்தை சேர்ந்த யாராவது ஒருவர் வேதனைக்கு ஆளாக்கப் பட்டிருக்கிறார் என்பதை உணர முடிந்தது.

இதைக் குறிப்பிட காரணம் சோவியத் ரஷ்யா யுத்தத்திற்கு தயாராக இருக்கிறது. மற்ற நாடுகளை அச்சுறுத்த விரும்புகிறது என்று மற்றவர்கள் கூறும் போதுநான் அந்த சம்பவங்களைத்தான் எண்ணினேன்.

அதை (யுத்தத்தை) சோவியத் ரஷ்யா விரும்பவில்லை என்பதை எடுத்துக் காட்டியவர் ஆண்ட்ரபோவ் நல்லகொள்கைக்கு சொந்தக்காரர் மறைந்து விட்டார் என்றுதான் கூற வேண்டும்.

துரைமுருகன் பேசும் போது ஒருநல்ல கருத்தை சொன்னார்.

ஆண்ட்ரபோவ் குறுகிய காலம் ஆண்டாலும் சிறப்பான சேவையை செய்தார் என்று குறிப்பிட்டார்

எத்தனை ஆண்டுகள் ஆண்டார் என்பதல்ல, எத்தகையை நல்லவைகளைச் செய்தார் என்பது தான்.

இதுவரை நாம்கேள்விப்படாத வகையில், லஞ்ச ஊழலில் ஈடுபட்ட இருவரை தூக்கிலிட்டவர் ஆண்ட்ரபோவ் அதை நினைத்து பெருமைப் படுகிறோம். அவரை இழந்தது ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும்.

அவை முன்னவர் கொண்டு வந்த தீர்மானத்தை நிறைவேற்றும் வகையில் அரசின் சார்பிலும் உங்கள் சார்பிலும் எனது சார்பிலும் இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

சென்னை நகர

## வேலை நிறுத்தம்: எல்லா இடங்களிலும் சகஜ நிலைமை

### தலைமை செயலாளர் - போலீஸ் கமிஷனர் பேட்டி

சென்னை, பிப். 14- சென்னை நகரிலும், சுற்றுப்புறத்திலும் தி. மு. க. உள்ளிட்ட 14 கட்சிகள் இன்று நடத்திய பந்த்தால் எந்தவித பாதிப்பும் ஏற்படாமல் சகஜநிலை இருந்தது.

நகரில் அநேகமாக எல்லா இடங்களிலும் சிறிய கடைகள் உள்ளிட்டு எல்லாகடைகளும்வழக்கம் போல திறந்து இருந்தன.

நகரில் ஆட்டோரிக்ஷா டாக்சி, சைக்கிள்ரிக்ஷாக்கள்வழக்கம் போல்ஒடின. சினிமா தியேட்டர்களும் வழக்கம்போல் இயங்கின.

சிம்சன் மற்றும் பிஅண்ட்சி ஆலை பிரச்னைக்காக திமுக உள்ளிட்ட 14 கட்சிகள் இன்று ஒரு நாள் பொது வேலைநிறுத்தத்தை அறிவித்திருந்தது.

இந்த பந்த்தால் சகஜநிலைமையில் எந்தபாதிப்பும் ஏற்படவில்லை.

### தலைமைச் செயலாளர் பேட்டி

'பந்த்' குறித்து தமிழக அரசின் தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் நிருபர்களிடம் கூறியதாவது:

இன்று பொதுவாக எல்லா இடங்களிலும் சாதாரணநிலைமை இருக்கிறது எத்தகைய அசம்பாவிதமும் இல்லை.

அத்தியாவசியமான அன்றாடப் பொருட்கள் விற்பனை செய்யும் சிறு சிறு கடைகள் வழக்கம்போல்திறந்துஉள்ளன.

ரயில்கள் சரியான நேரத்திற்கு சென்றன. வெளியூரிலிருந்து வரவேண்டிய எக்ஸ்பிரஸ் பஸ்கள் சரியான நேரத்திற்கு வந்து சேர்ந்தன.

நாளை காலைவழக்கம் போல் பஸ்கள் ஒடும்

இவ்வாறு தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் நிருபர்களிடம் கூறினார்.

### கமிஷனர்

சென்னைநகர போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் இன்று நடந்த 'பந்த்' குறித்து நிருபர்களுக்கு பேட்டி அளித்தார். அப்போது அவர் கூறியதாவது:—

சென்னையில் இன்று நடைபெற்ற 'பந்த்' காரணமாக எந்தவித அசம்பாவிதமும் நடைபெறவில்லை.

வழக்கம்போல் எல்லா கடைகளும் திறந்து இருந்தன. பொதுமக்களுக்குபாதுகாப்பு அளிக்கும்வகையில்- ஒரு சிறு சம்பவம் கூட நடைபெறாத அளவிற்கு- போலீஸ் பாதுகாப்பு போடப்பட்டுள்ளது.

இவ்வாறு கமிஷனர் ஸ்ரீபால் கூறினார்.

பஞ்சாபில் பந்த்:

### துப்பாக்கி சூட்டில் ஒருவர் பலி

சண்டிகார், பிப். 14— பஞ்சாபில் நடந்த பந்த்தை ஒட்டி பிராஸ்பூர் என்ற இடத்தில் போலீசார் நடத்திய துப்பாக்கி சூட்டில் ஒருவர் பலியானார்.

துப்பாக்கி சூட்டில் பிரேம்குமார் என்பவர் அந்த இடத்திலேயே உயிரிழந்தார் 15 பேருக்கு காயம் ஏற்பட்டது.

## கம்பம் கழகஎம்.எல்.ஏ. வீடு தாக்குதல்: திமுகவினர் வன்முறை

### ஜக்கையன் எம். பி. கண்டனம்

கம்பம் பிப். 14- கம்பம் தொகுதி கழக எம். எல். ஏ. ஆர். டி. கோபாலின் வீட்டை தி. மு. க. குண்டர்கள் கற்களாலும், சோடா பாட்டில்களாலும் தாக்கி வன்முறை வெறியாட்டத்தில் ஈடுபட்டுள்ளனர்,

தி.மு.க, மற்றும் 14 கட்சிகளைச் சேர்ந்தவர்கள், வழிநடைப்பயணம் என்ற பெயரில் கம்பம் நகரில் வன்முறை வெறியாட்டத்தில் ஈடுபட்டுள்ளனர்.

வழி நடைப்பயணம் செல்லுவதாக அவர்கள் அறிவித்திருந்த வழியை விட்டுவிட்டு வேண்டுமென்றே கம்பம் தொகுதி கழக எம், எல், ஏ, ஆர், டி. கோபால் வீடுவழியாக சென்றனர், அப்போது திமுகவைச்சேர்ந்தவர்கள் ஆர். டி. கோபால் வீடு மீது சோடாபாட்டில்கள் மற்றும் கற்களைக் கொண்டு சரமாரியாகத் தாக்கினார்கள் எம். எல். ஏ.சென்னையில் உள்ள நேரத்தில் வேண்டுமென்றே தி.மு.கவினர் இந்த வன்முறையில் ஈடுபட்டனர்.

இந்த வெறிச்செயலில் ஈடுபட்ட தி.மு.கவினர் பின்னர் அங்கிருந்து சென்றுவிட்டனர்.



### ஜக்கையன் கண்டனம்

தி.மு.க வினரின் வன்முறை வெறியாட்டத்தை கண்டித்து ஜக்கையன் எம். பி, ஓர் அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது:-

அமைதியாக ஊர்வலம் நடத்துவோம் எனக் கூறிய தி. மு. க.வினர் வேண்டுமென்றே வழியை மாற்றிக் கொண்டு வன்முறைச் செயலில்ஈடுபட்டுள்ளனர். இவ்வாறு ஜனநாயகத்திற்கு புறம்பான செயலில் ஈடுபடுவது வன்மையாக கண்டிக்கத்தக்கது ஆகும்.

முதல்வர் புரட்சித்தலைவரின் உயரிய லட்சியங்களை நிறைவேற்ற மக்கள் தொண்டில் ஈடுபடுவோர் மீது தி.மு.கவினர் இவ்வாறு தாக்குதல் நடத்துவது கண்டிக்கத் தக்கது ஆகும்.

இவ்வாறு ஜக்கையன் எம்.பி. தெரிவித்துள்ளார்.

## ரஷ்யாவின் புதிய அதிபர் செர்னங்கோ

மாஸ்கோ, பிப், 14- சோவியத் ரஷ்யாவின் புதிய அதிபராக செர்னங்கோ ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

ரஷ்ய அதிபர் ஆண்ட்ரபோவ் மரணம் அடைந்ததைஅடுத்துசெர்னங்கோ புதிய அதிபராக தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளார். ஆண்ட்ரபோவ்மரணம் அடைந்ததைத் தொடர்ந்து புதிய அதிபர் யார் என்பதுபற்றி பிரச்சினை ஏற்பட்டது. இப்பதவிக்கு செர்னங்கோ உட்பட மூவர் பெயர்கள் அடிபட்டன.

புதிய அதிபரைத் தேர்ந்தெடுக்க ரஷ்ய கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ கூட்டம்நேற்று நடந்தது.

இந்தக் கூட்டத்தில் செர்னங்கோ ஒருமனதாக தேர்ந்து எடுக்கப்பட்டார்.

புதியஅதிபராக தேர்ந்து எடுக்கப்பட்டுள்ள செர்னங்கோ 72 வயதானவர்.

கழக கொள்கை பரப்புச் செயலாளர்

## செல்வி ஜெயலலிதா அவர்களின் தென்னாற்காடு மாவட்ட நிகழ்ச்சிகள் தள்ளிவைப்பு

பெருமழையின் காரணமாக கழக கொள்கை பரப்புச் செயலாளர் செல்வி ஜெயலலிதா அவர்களின் தென்னாற்காடு மாவட்ட சுற்றுப்பயணம் ஒத்திவைக்கப் படுகிறது.

அறிவிக்கப்பட்டபடி பிப்ரவரி மாதம் 18,19,20,21 ஆகிய தேதிகளுக்கு பதிலாக பிப்ரவரி 25, 26, 27, 28 தேதிகளில் முன்னர் அறிவிக்கப்பட்ட நிகழ்ச்சி நிரல்களின்படி நிகழ்ச்சிகள் நடைபெறும்என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சென்னை—14,
14—2—84

-தலைமைக்கழகம்

தாமிரபரணியில் வெள்ளம்:

# தமிழகத்தின் பல பகுதிகளில் தொடர்ந்துமழை

திருநெல்வேலி, பிப் 14 தாமிரபரணியில் வெள்ளம் கரைபுரண்டு ஓடுவதால் கரையோரத்தில் வசிக்கும் மக்களுக்கு வெள்ள எச்சரிக்கை விடப்பட்டுள்ளது.

வங்கக்கடலில் காற்று அழுத்த தாழ்வு மண்டலம் உருவாகியிருப்பதை அடுத்து தமிழகத்தின் கடலோர மாவட்டங்களில் பரவலாக மழை பெய்துள்ளது.

தஞ்சை மாவட்டத்தில் பலத்த மழை பெய்ததை அடுத்து சம்பா அறுவடை நடைபெறுவது பாதித்துள்ளது.

திருச்சி, புதுக்கோட்டை, மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி, செங்கற்பட்டு, தென்னாற்காடு ஆகிய மாவட்டங்களிலும் பரவலாக மழை பெய்துள்ளது.

தொடர்ந்து மேற்கண்ட மாவட்டங்களில் விட்டுவிட்டு மழை பெய்து வருகிறது.

தாமிரபரணியில் வெள்ளம் காரணமாக, கரையோர மக்களுக்கு எச்சரிக்கை விடப்பட்டுள்ளது.

## சென்னை நகரில்...

சென்னை நகரில், கடந்த 2 நாட்களாக விட்டு, விட்டுமழைபெய்து வருகிறது. நேற்றிரவும் இன்று காலையும் சென்னை நகரில் மழை பெய்தது.

அடுத்த 36 மணி நேரத்தில் தமிழகத்தில் பரவலாகவும், தஞ்சை உட்பட கடலோர மாவட்டங்களில் பலத்த மழையும் பெய்யும் என வாநிலை ஆய்வு நிலையம் அறிவித்துள்ளது.

## தமிழக அரசு போக்குவரத்து நிறுவனங்கள்: மத்திய திட்டக்குழு பாராட்டு

இந்தியாவிலேயே தலைசிறந்தவைகளாக தமிழக அரசுப்போக்குவரத்துநிறுவனங்கள் செயல்படுகின்றன என்று சட்டசபைக் கூட்டுக் கூட்டத்தில் ஆளுநர் குரானா கூறினார்.

ஆளுநர் குரானா கூறியதாவது:-

அரசுப் போக்குவரத்து நிறுவனங்களின் பணி தொடர்ந்து மிகவும் திருப்தி தரும்வகையில் நடைபெற்று வருகிறது.

நாட்டிலேயே தமிழ்நாடு அரசுப் போக்குவரத்து நிறுவனங்கள் தலை சிறந்தவைகளில் ஒன்றாக விளங்குகின்றன என்று மத்தியத் திட்டக்குழு கருத்து தெரிவித்துள்ளது.

ஈரோட்டில் ஜீவா போக்குவரத்து நிறுவனம், நாகர்கோவிலில் நேசமணி போக்குவரத்து நிறுவனம், காரைக்குடியில் மருதுபாண்டியர் போக்குவரத்து நிறுவனம் ஆகிய புதிய மூன்று போக்குவரத்து நிறுவனங்கள் 1-4-1983 முதல் தனித்துச் செயல்படத் தொடங்கியுள்ளன.

கடந்த நிதியாண்டில், மூன்று நிறுவனங்கள் தவிர, பிற நிறுவனங்கள் அனைத்தும் ஆதாயம் ஈட்டியுள்ள போதிலும், டீசல் வழங்கல் விலை அவ்வப்போது உயர்ந்து வருவதால், இந்த ஆதாய நிலை தொடர்ந்து இருப்பது கடினமாகும்.

1980 முதல் இப்பொழுதுவரையிலான கால அளவில், டீசலின் விலை 100 சதவீதத்திற்கும் மேல் உயர்ந்துள்ளது.

இதன் காரணமாக, கடந்த மூன்றரை ஆண்டுகளில் அரசுப் போக்குவரத்து நிறுவனங்களுக்கு ரூ 115 கோடி அளவிற்குக் கூடுதல் செலவு ஏற்பட்டுள்ளது.

இவ்வாறு ஆளுநர் குரானா கூறினார்.

ரஷ்ய அதிபர்

## ஆண்ட்ரபோவ் இறுதிச்சடங்கு: இந்திரா பங்கேற்பு

மாஸ்கோ, பிப். 4 ரஷ்ய அதிபர் ஆண்ட்ரபோவின் இறுதிச்சடங்கில் பங்கேற்க பிரதமர் இந்திராகாந்தி மாஸ்கோ வந்துள்ளார்.

ஆண்ட்ரபோவின் இறுதிச்சடங்கு இன்று மாலை நடைபெறுகிறது.

கடந்த வியாழன் அன்று மரணம் அடைந்த ரஷ்ய அதிபர் ஆண்ட்ர போவின் இறுதிச்சடங்கில் கலந்து கொள்ளபிரதமர் இந்திரா காந்தி நேற்று மாலைதனி விமானம் மூலம் மாஸ்கோ வந்து சேர்ந்தார்.

பிரதமர் இந்திராவுடன் வெளிநாட்டு இலாகா அமைச்சர் நரசிம்மராவ், பிரதமரின்விசேஷத்தூதர் ஜி. பார்த்தசாரதி, வெளிநாட்டு இலாகா செயலாளர் ரஸ்கோத்ரா, துணை செயலாளர் சுரேகான் இந்திராவின் உதவியாளர் ஆர்.கே. தவான் ஆகியோரும் வந்தனர்.

ஆண்ட்ரபோவின் உடல் அடக்கம் இன்று மாலை இந்திய நேரப்படி 3-15 மணிக்கு நடைபெறுகிறது.

இறுதிச் சடங்கு முடிவடைந்தபிறகு பிரதமர் இந்திரா ரஷ்யாவின் புதிய அதிபர் செர்னங்கோவை சந்தித்து இந்தியா-சோவியத் ரஷ்யா உறவு பற்றி விவாதிப்பார்.

மறைந்த

## பஷீர்அகமதுக்கு மேலவை அஞ்சலி

சென்னை, பிப். 14—

தமிழக சட்டமேலவை இன்று காலை 11மணிக்கு கூடியது.

சட்டமேலவையின்முன்னாள் உறுப்பினரும் உயர் நீதிமன்ற நீதிபதியுமான பஷீர் அகமதுசையத் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கப்பட்டது.

அவரது குடும்பத்தினருக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் அவையினர் இரண்டு நிமிடம் எழுந்து நின்று மவுன அஞ்சலி செலுத்தினர்.

(5-ம் பத்தி தொடர்ச்சி)

82ம் ஆண்டு சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளரானார். பின்னர் குடியரசுத் தலைவரானார். அவர் 15 ஆண்டுகாலம் கே. ஜி. பி. உளவு நிறுவனத்திற்கு தலைமைத் தாங்கி உலகிலுள்ள நாடுகளின் போக்குகளின் திறனை அறிந்தவர். தனித்திறமை இருந்ததால்தான் அவர் போற்றப்பட்டார். அவர் மிகக்குறுகிய காலத்தில் 15 மாதத்திற்குள் மறைந்தார் என்பது நல்லுறவை நிலைநாட்டி வருகிற இந்தியாவிற்கு பெரும் இழப்பாகும்.

லெனினின் கொள்கையை நடைமுறைப் படுத்துவதிலும் அவர் அழுத்தம் திருத்தமாக உறுதியாக இருந்தார். குருஷேவின் நம்பிக்கையைப் பெற்றவர். அவரது இழப்பு ஈடுசெய்ய முடியாத இழப்பாகும்.

நாம் இந்த மாநில சட்ட சபையின் மூலம் இந்தத்தீர்மானத்தைக் கொண்டு வந்து இந்தத் தீர்மானத்தின் மூலம் மக்களின் சார்பாகவும் அரசின் சார்பாகவும், அவரை இழந்து வருந்தும் மக்களுக்கும், குடும்பத்திற்கும் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இவ்வாறு நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

நாவலரின் தீர்மானத்தை வழிமொழிந்துஎதிர்க்கட்சித் தலைவர் ஹாஜாசெரீப், தி.மு.க துரைமுருகன், மார்க்சிஸ்ட் சங்கரய்யா இந்திய கம்யூனிஸ்ட் கட்சி அழகர்சாமி கா. கா. தே. கா. நவநீத கிருஷ்ணபாண்டியன் பார்வர்டுபிளாக் ஆண்டித்தேவர் ஜனதா இஸ்மாயில். காமராஜ் காங்கிரஸ் நெடுமாறன், மக்கள்கட்சி சட்டநாத கரையாளர், இந்தியகுடியரசுக்கட்சி ஜி. மூர்த்திஆகியோர்பேசினர்.

விபத்தில் இறக்கும் கட்டிட

தொழிலாளர் குடும்பத்திற்கு ரூ. 10ஆயிரம்

## இந்தியாவுக்கே வழிகாட்டும் புரட்சித்தலைவர்

அண்ணாதொழிற்சங்கப்பேரவை பாராட்டு

சென்னை, பிப். 14. விபத்தில் இறக்கும் கட்டிடத் தொழிலாளர் குடும்பத்திற்கு ரூ. 10 ஆயிரம், ஓய்வுபெறும் அரசு ஊழியர்களுக்கு ரூ. 10 ஆயிரம் என்று புரட்சித்தலைவர் அரசு அறிவித்திருப்பது இந்தியாவுக்கே வழிகாட்டியாக உள்ளது என்று வை. பெருமாள் பாராட்டியுள்ளார்.

அண்ணா தொழிற் சங்கப்பேரவை பொதுச் செயலாளர் வை. பெருமாள் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

ஓய்வு பெறும் அரசுஊழியர்களுக்கு ரூ 10 ஆயிரம் திட்டம் அறிவிக்கப்பட்டுள்ளது.

### வழிகாட்டி

கட்டிடத் தொழிலாளர்களுக்கு காப்புறுதி திட்டம் கட்டாயமாக்கப்பட்டுள்ளது.

இதனால் பயன்பெறாதவர்களுக்கு முதல்வர் நிவாரண நிதியில் இருந்து இறந்தவரின் குடும்பத்திற்கு ரூ. 10 ஆயிரம் அளிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்தியத் துணைக் கண்டத்திலேயே இந்த அரசின் அறிவிப்பு தான்வழிகாட்டியாக உள்ளது.

மற்ற மாநிலங்களுக்கு வழிகாட்டியாக இது உள்ளது. ஏற்கனவே கட்டிட தொழிலாளர்களுக்கு பல சலுகைகளை புரட்சித்தலைவர் அரசு வழங்கி இருக்கிறது. அதற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல இந்த அறிவிப்பு வெளிவந்துள்ளது.

இவ்வாறு வை. பெருமாள் கூறியுள்ளார்.

## கழகத் தோழர் இல்லத் திருமணம்

திருத்தணி, பிப். 14—

கழகத் தோழரும் பத்திரிகையாளருமான தணிகை திருவேங்கடத்தின் அண்ணன் மகன் எஸ். சம்பத் குமாருக்கும், வனத்துறை அதிகாரி கே தாமோதரத்தின் மகள் பிளாரன்ஸ் தேன்மொழிக்கும் அரக்கோணம் சி.எஸ்.ஐ புதிய ஆலயத்தில் திருமணம் நடந்தது. பின்னர் அன்ராஜ் புக்ராஜ் திருமண மண்டபத்தில் வரவேற்பு நடந்தது.

மணமக்களை வாழ்த்தி அமைச்சர்கள் பண்ருட்டியார், ஆர்.எம். வீ. செய்தி அனுப்பியிருந்தனர்.

ஆண்ட்ரபோவ் மறைவுக்கு சட்டசபையில் அனுதாப தீர்மானம்

# இந்திய - ரஷ்ய நட்புறவுக்கு அரும்பணி ஆற்றிய தலைவர்

ரஷ்ய ஜனாதிபதிக்கு அமைச்சர் டாக்டர் நாவலர் புகழஞ்சலி

சென்னை. பிப். 14- இந்திய - ரஷ்யநட்புறவை நீடிக்க அரும்பணி ஆற்றிய பெருமை ரஷ்ய ஜனாதிபதி ஆண்ட்ரபோவைச் சேரும் என சட்டசபையில் அமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

ஆண்ட்ர போவின் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானம் தமிழக சட்டசபையில் நிறைவேற்றப்பட்டது.

சோவியத் குடியரசின் தலைவர் யூரிவிளாடி மீரோவிச் ஆண்ட்ரபோவ் மறைவு குறித்த இரங்கல் தீர்மானத்தை தமிழக சட்டசபையில் அவை முன்னவர் நிதியமைச்சர் டாக்டர் நாவலர் முன்மொழிந்து கூறியதாவது:—

சோவியத் ஒன்றிய குடியரசின் தலைவர் ஆண்ட்ரபோவ் மறைவின் மூலம் உலகம் ஓர்ஒப்பற்ற தலைவரை இழந்திருக்கிறது. சோவியத் சிறந்த பாதுகாவலரை இழந்திருக்கிறது.

### இந்தியாசிறந்த நண்பரை இழந்துள்ளது

இந்தியா சிறந்தநண்பரை இழந்திருக்கிறது, இந்திய-சோவியத் நட்புறவை நீடிக்கச் செய்யும் வகையில் உறவை வளர்த்த பிரஷ்னேவ் வழியில் சிறப்பாக பணியாற்றிய சோவியத் ஒன்றிய நட்புறவை நீடிக்க அரும்பணி ஆற்றிய பெருமை யூரிஆண்ட்ரபோவை சாரும்.

15 திங்கள் தான் அவர் பொறுப்பில் வீற்றிருந்தாலும் அவர் ஆற்றிய சேவை உலகத்தார் புகழும் முறையில் இருப்பதைக் காண முடிகிறது

எங்கு பார்த்தாலும் போர்மேகம் சூழ்ந்திருக்கும் நிலையில் நாட்டுக்கு நாடு ஆக்ரமிப்பு எண்ணம் இருக்கும் நிலையில் சிறுநாடுகள் கூட அணு ஆயுதம் பெற்றுள்ள நிலையில் மிகப்பெரிய சோவியத் நாட்டின் சார்பில் ஆண்ட்ரபோவ் உலக அமைதியை நிலை நாட்ட அழுத்தம் திருத்தமாக எடுத்துக் கூறினார்.

இரண்டாம்உலகப்போரில் சோவியத் குடியரசில் 2 கோடி பேர் அழிக்கப்பட்ட நிலையில் பெரும் நகரங்களெல்லாம் அழிக்கப்பட்டன. இன்னொரு போர் வரக்கூடாது, தங்களுக்கு வந்த இழப்பு மற்ற நாடுகளுக்கு வரக்கூடாது என்பதில் அவர் கண்ணும் கருத்துமாக இருந்தார்.

அண்மையில் நானும் பேரவைத் தலைவரும் மற்றசில உறுப்பினர்களும் ரஷ்யாவுக்கு சென்றபோது அங்கே லெனின் கிராடில் இரண்டாம் உலகப்போரில் அழிக்கப்பட்டவைகளைக் கண்காட்சி வடிவம்கண்டதை நினைவுகூர விரும்புகிறேன்.

ஆண்ட்ரபோவ் அணு ஆயுதப் போர் மூளக் கூடாது என்பதில் தனது கருத்தினை எடுத்துக் கூறி வந்துள்ளார், அவரால் Peacenik என்ற ஆங்கிலச்சொல்லே உருவாகியுள்ளது.

அவர் வழிகாட்டுதலில் இருந்த சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியே இந்தியாவுடன் நல்லுறவை நிலைநாட்டும் தீர்மானத்தைப் போட்டிருக்கிறது. இதற்கு முன்பு எப்போதும் அப்படித் தீர்மானம் போட்டதில்லை அதையொட்டிதான் 3 நாட்களை துக்கநாளாக இந்தியாவும், தமிழகமும் கடைப்பிடித்தது, அதுமட்டுமல்ல 70 கோடி மக்களின் சார்பில் இந்திராஅம்மையார் ஆண்ட்ரபோவ் இறுதிச்சடங்கில் கலந்து கொள்ளச் சென்றிருக்கிறார். இதிலிருந்து நட்புறவின் தன்மை விளங்குகிறது.

ஆண்ட்ரபோவ் சாதாரண ரயில்வேதொழிலாளியின் மகனாகப்பிறந்தார். அவரின் கோட்பாடுகள் அதை நடைமுறைப்படுத்தும் தன்மை ஆகியவை அவர் குடியரசுத்தலைவர் பதவியை பெரும் அளவிற்கு சிறப்பாக இருந்தார் என்பது தெரிகிறது. 16வது வயதில் கப்பல் படையில் பணியாற்றி 39ம் ஆண்டில் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினரானார். 57ம் ஆண்டில் மத்திய குழு உறுப்பினரானார். பிறகும்மற்பார்வையிடும் பொறுப்பிலிருந்து சிறிது நாளில் ஒரு பிரிவிற்குத்தலைமை தாங்கும் பொறுப்பையும் ஏற்றார்.

53ம் ஆண்டில் ஹங்கேரியில் ரஷ்யாவின் தூதராக பொறுப்பேற்று 57 ம் ஆண்டுவரை சிறப்பாக பணிபுரிந்தார்.

67ம் ஆண்டு அமைச்சரவையில்பாதுகாப்புககுழு தலைவராக இருந்தார்.

(8-ம் பத்தி பார்க்க)



தலைமைக்கழக அறிக்கை எண் 34-84

### திருச்சி மாவட்டம் ஆலத்தூர் ஒன்றிய கழகத்தோழர்களுக்கு....

திருச்சி மாவட்டம் ஆலத்தூர் ஒன்றிய செயலாளராக பணி ஆற்றிவரும்

திரு. வே. முத்தமிழ்செல்வன்

இன்றுமுதல் ஒன்றிய செயலாளர் பொறுப்பிலிருந்து நீக்கப்படுகிறார்.

மறு அறிவிப்பு வரும்வரை ஆலத்தூர் ஒன்றிய கழக பொறுப்பாளராக அடைக்கம்பட்டியைச் சேர்ந்த

திரு. து. குருசாமி
(ஒன்றிய துணைச் செயலாளர்)

பணியாற்றுவார்.

கழக, மன்ற தோழர்கள் இவருடன் இணைந்து பணியாற்றும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

கழக நிறுவனத்தலைவர் மாண்புமிகு புரட்சித் தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச் செயலாளர் திருமிகு. ப.உ.ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

என். ராசாங்கம்
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14
14-2-84



PUBLISHED BY K.RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D M K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34 NELSON MANICKAM ROAD MADRAS-600 029 Editor: E.PARASURAMAN

# தலைநகர்வந்திட்ட தமிழகம்!

சென்னைதீவுத் திடலில் அமைந்துள்ள சுற்றுலாத் தொழில் பொருட்காட்சிக்கு அரசு தலைமைச் செயலாளர் சொக்கலிங்கம் நிருபர்களை அழைத்துச் சென்று காட்டினார்.

சேலம் மாவட்டத்தின் சார்பில் அமைக்கப்பட்டிருந்த அரங்கில் ஜாக்கார்டு கைத்தறியந்திரம் அமைக்கப்பட்டுள்ளது இதில் வெளிநாட்டினர் வியந்திடும் வகையில் நேர்த்தியானபட்டுத் துணிகளையும் கைத்தறி துணிகளையும் இருவர் நெய்து காட்டுகின்றனர்.

சேலம் நகரில் உள்ள பூம்புகார் உலோக சிற்ப பயிற்சி நிலையத்தில் உள்ள மாணவர்களால் தயாரிக்கப்பட்ட சக்தி, சிவன், கோட்டை மாரியம்மன், மீனாட்சி கல்யாணம் போன்றசிலைகள் அந்த மாணவர்களின் திறமையை விளக்குகின்றன.

## கண்ணை கவரும் சிற்பங்கள்

ஆத்தூர் தம்மம்பட்டியில் செய்யப்படும் மரச் சிற்பங்கள் கண்ணையும் கருத்தினையும் கவருகின்றன. இக்கலையினை போற்றி பாதுகாத்திடும் வகையில் ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டத்தின் கீழ் அரசு இளைஞர்களுக்கு பயிற்சி அளிக்கிறது.

கெச்சிப் பாளையத்தில் தயாரிக்கப்படும் ஆட்டு ரோம கம்பளம் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது. ஒரு சதுர அடி ரூ. 2. 25 காசுதான்.

செவ்வாய்பேட்டை பகுதியில் அதிக அளவில் நடைபெறும் வெள்ளி வேலைப்பாடு மிகுந்த நகைகளும் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன.

மேச்சேரி சிவசண்முகம் முட்டைக்குள் ஓவியம் வரைவதில் எத்தகைய திறன் மிகுந்தவர் என்பதை அரங்கில் உள்ள ஓவியங்களிலிருந்து காண முடிந்தது. ஒரு அரிசியில் திருவள்ளுவர் படத்தையும் மற்றொரு அரிசியில் முதல்வர் புரட்சித்தலைவர் உருவத்தையும் வரைந்துள்ளது மிக அற்புதமாக உள்ளது.

சேலம் உருக்காலை தயாரிக்கும் எவர்சில்வர் தகடுகள் விளக்கம் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கிறது.

ஒட்டு மொத்தமாக சேலம் மாவட்டத்தின் பலவகைச்சிறப்பைவண்ண வண்ண சிலைகளின் மூலம் விளக்கம் தருவதற்கு மாவட்ட செய்தி மக்கள் தொடர்பு அதிகாரி பால்ராஜ் ஏற்பாடு செய்திருக்கிறார்.

## சென்னைக்கு வந்துள்ள குற்றால அருவி

எழில் கொஞ்சும் குற்றாலத்தின் ஐந்தருவி சென்னைக்குவந்துள்ளதை சுற்றுலா பொருட்காட்சியில் காண முடிந்தது.

திருநெல்வேலிமாவட்ட அரங்கின் முகப்பில் ஐந்தருவி சிறப்புற அமைக்கப்பட்டுள்ளது.

அரங்கின் உள்ளே நுழைந்ததும் மாவட்டத்தில் செய்து முடிக்கப்பட்ட தன்னிறைவுத் திட்டப்பணிகள் பற்றிய விவரங்களும், அந்தத் திட்டம் நிறைவேறும் பாங்கினையும் மாதிரி மூலம் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

வங்கிகள் மூலம் ஏழை எளிய மக்களுக்கு கறவை மாடுகள் வழங்குதல், கடன் கொடுத்தல் ஆகியவை ஊரக ஒருங்கிணைந்த வளர்ச்சி திட்டத்தின் மூலம் நடைபெறும் அற்புதமான திட்டம். அவைகளையும் புகைப்படம் மூலமும், மாதிரி மூலமும் அழகாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

திருநெல்வேலிமாவட்டத்தில் காடுகள் வளர்ச்சி பற்றியும், அதில் வாழும் மிருகங்கள் பற்றிய விவரங்களும் வண்ணப் படங்களாக வைக்கப்பட்டுள்ளன.

சிறு தொழில் வளர்ச்சியினைக் குறிக்கும் வகையில் தீப்பெட்டித் தொழில்உற்பத்தி விவரங்களும், மாவட்டத்தில் உற்பத்தியாகும் பிரம்புப் பொருட்கள், தோல் தொழில், பொம்மைப் பொருட்கள், கைவினைப் பொருட்கள் ஆகியவையும் அழகாகமக்கள்பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன.

உழவுத் தொழிலுக்கு உரம் தரும் 'ஸ்பிக்' நிறுவனத்தில உரங்கள் உற்பத்தி செய்யப்படும்சிறப்பு மிகு காட்சி.

திருநெல்வேலி மாவட்டத்தில் பெயர் பெற்ற பட்டுநூல்உற்பத்திபற்றிய விவரங்களும் மாதிரிகளும் மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன.

சுற்றுலா வளர்ச்சியினைக் குறிக்கும் வகையில் பாரதி மணிமண்டபம், கட்டபொம்மன் சிலை, கட்டபொம்மன் கோட்டை, ஆகியவையும் காட்சியில் வைக்கப்பட்டுள்ளன.

சென்னையில் சாரல் வீசும் குற்றாலத்தின் ஐந்தருவி.

## ஆண்டாள் திருக்கோயில் அரங்கு

ராமநாதபுரம் மாவட்ட அரங்கின் முகப்பு ராமர், ஆண்டாள் திருக்கோயிலின் கோபுரம் முகப்பாக வைக்கப் பட்டுள்ளது

அரங்கின் உள்ளே மாவட்டத்தில் உள்ள கோயில்களின் சிறப்பை விளக்கும் வண்ணப்படங்கள் வைக்கப்பட்டுள்ளன.

தன்னிறைவுத் திட்டத்தில் கட்டப்பட்ட பள்ளிக்கூடம் மகப்பேறுமருத்துவ கட்டிடம் இணைப்பு சாலைகள் பாலங்கள் வாய்க்கால் பேன்றவற்றை விளக்கும் வண்ணப்படங்களும் பட்டு வளர்ப்பு பட்டுத தொழில் கூட்டுறவு நூற்புஆலைசங்குத்தொழில் இரால் மீன் பதனிடும் தொழில் போன்றவற்றை விளக்கும் வண்ணப் படங்கள் காட்சிக்கு வைக்கப் பட்டுள்ளன

சிவகாசியில் ஆப்செட் பிரிண்டிங்ஸ், வெடி செய்தல், தீபெட்டிக தொழில் இவற்றின் விளக்கப்படங்களும் 2.345கி.மீ. நீளமும் 7 5 மீட்டர் அகலமும், 22அடிஉயரமும், 78தூண்களையும் கொண்ட ஆசியாவிலேயே கடல்மீது கட்டப்படும் முதல் பாலமான பாம்பன் பாலத்தின் மாதிரியும், விளவக்கல் அணைவெம்பக்கோட்டை அணைகளின் மாதிரியும், கிராபைட், சங்குகளின் மாதிரிகளும் காட்சிக்கு வைகக்கப்பட்டுள்ளன

ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித்திட்டத்தை விளக்கும்வண்ணப்படங்கள், தமிழ்நாடு சிமெண்ட்ஸ், வண்ணப்படங்கள் இராமநாதபுரத்தில் தயாரிக்கும் பனைப் பொருட்கள் ஆகியவைகாட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

ராமநாதபுரம் மாவட்டத்தின் வளர்ச்சிப்பணிகள் குறித்த ஒலி, ஒளிக் காட்சிகள் அரங்கில்காண்பிககப்படுகிறது.

## பெரியாரின் வாழ்க்கை வரலாறு

தந்தை பெரியாரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் புகைப்படங்கள் பெரியார் மாவட்ட அரங்கில் காட்சிக்கு வைக்கப் பட்டிருக்கிறது.

பெரியார் மாவட்டம் முதல்வர் புரட்சித் தலைவரால் நான்கு ஆண்டுகளுக்கு முன்பு தான் துவக்கப் பட்டது என்றாலும் மாவட்ட வளர்ச்சிப்பணிகள் வெகுவேகமாக நடைபெற்று வருகிறது என்பதை அரங்கிற்குள் காண முடிந்தது.

கி. மு. 2000 ஆண்டுகளுக்கு முன்பே பெரியார் மாவட்டத்தில் ஓடுகின்ற நொய்யல் ஆற்றின் கரையில் வாழ்ந்த மக்களின் நாகரிகததை விளககும் பலகையும் அம்மக்கள் உபயோகித்த பழம் பொருட்களும் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது.

## கல்பாக்கம் யுரேனியம்

கல்பாக்கத்தில் அணுவிலிருந்து மின்சக்தி உற்பத்தி செய்யப்படுகிறது. அதற்கு அடிப்படையான யுரேனியம் செங்கற்பட்டு மாவட்ட அரங்கில் வைக்கப்பட்டுள்ளது.

நடராஜர் - பத்ரகாளி போட்டி நடனம் ஒளி ஒலி கட்சியாக அரங்கிற்குள் அமைக்கப் பட்டுள்ளது.

செங்கற்பட்டு மாவட்டத்தின் தொன்மை மிகுந்த ஆலயங்களின் சிறப்பு, கலைநயம், சுற்றுலாத் தலங்கள் காட்சியில் வைக்கப் பட்டுள்ளது மிகச் சிறப்பாக உள்ளது

## மன்னர்களின் கத்தி துப்பாக்கிகள்

தமிழக மன்னர்கள் பயன்படுத்திய-போர்வீரர்கள் பயன்படுத்தியவளரித் தடி, வாள், வில், பட்டாக் கத்தி, துப்பாக்கிகள், போன்ற போர்க்கருவிகள் புதுக்கோட்டை மாவட்ட அரங்கில் வைக்கப்பட்டுள்ளன.

மன்னர்களின் ஆசனங்கள் பயன்படுத்திய பல்வேறு பொருட்கள் கண்ணாடி அறைக்குள் தனியாக வைக்கப்பட்டுள்ளன.

புதுக்கோட்டை மாவட்டம் முழுவதிலும், சிறு தொழில்களும், கரைகத் தொழில்களும் நிறுவப்பட்டு வருகின்றன. சிப்காட் தொழில்இணையம் கூட்டுறவு நூற்பாலை ஆகியன நிறுவப்பட்டு வருகின்றன. அரசு அளித்துள்ள பல சலுகைகளின் காரணமாக புதுக்கோட்டை மாவட்டத்தில் தொழில் வளர்ச்சி நல்ல முன்னேற்றம் பெற்று வருகிறது. தொழில் வளர்ச்சியை விளக்கும் வகையில் வண்ணப்புகைப் படங்களும், மாதிரிகளும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

புதுக்கோட்டைக்கு அருகே உள்ள மரவப்பட்டி கிராமத்தைச் சேர்ந்த இளம்பிள்ளை வாதத்தினால் பாதிக்கப்படுருக்க முடியாமல் இருந்த சிறுவன் வீரையா முதலமைச்சர் சத்துணவு மையத்தில் தொடர்ந்து சத்துணவு உண்டதன் காரணமாக தற்போது நடக்கின்றான். இவை தொடர்பான வண்ணப் படங்களும் மாதிரிகளும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

புதுக்கோட்டை மாவட்டத்தின் கலை, வரலாறு மற்றும் வளர்ச்சிப் பணி சாதனைகள் குறித்து புதுமையானஎட்டு முனைஸ்லைட் கண்காட்சி வர்ணனையுடன் அமைக்கப்பட்டுள்ளது

புதுக்கோட்டை மாவட்ட அரங்கின்முகப்பு முழுவதும்கண்ணாடியால் அமைக்கப் பட்டுள்ளது. முகப்பின்உச்சியில்அமைக்கப்பட்டுள்ள தோகை விரித்தாடும் மயில், இம்மாவட்டத்தில் மட்டுமே அமைந்துள்ளவிராலிமலை மயில்கள் சரணாலயத்தை குறிப்பதாக அமைந்துள்ளது.

சேலம் பூம்புகாரில மாணவர்கள் கைவண்ணத்தில் உருவான கடவுளர்கள்

சாராயம்-மது வகைகள்

# மொத்த விற்பனை: அரசு ஏற்பு

சென்னை, பிப். 14— மதுவகைகளில் மொத்த வியாபாரத்தை அரசு தன் பொறுப்பில்மேற்கொண்டு இருப்பது பற்றி ஆளுநர் குரானா சட்டமன்ற கூட்டுக்கூட்டத்தில் கூறியதாவது:-

தமிழ்நாடு மதுவிலக்குச் சட்டத்தைச் செயல் படுத்துவதில் 1981-82 முதல் நாம் பெற்ற அனுபவத்தைக் கருத்தில் கொண்டு மாநிலம் முழுவதிலும் சாராயம் மற்றும் இந்தியாவில் தயாரிக்கப்படும் வெளி நாட்டு மதுவகைகளின் மொத்த விற்பனையை பொது நலன் கருதி அரசு தன்பொறுப்பில் எடுத்துக் கொண்டு அரசுக்குச் சொந்தமான நிறுவனம் ஒன்று இதனை நிர்வகிக்கவும் முறைப் படுத்தவும் வேண்டும் என்று மாநில அரசுமுடிவு செய்தது.

இந்த நோக்கத்துடன் தமிழ்நாடு மாநில விற்பனை நிறுவனம் அமைக்கப்பட்டது, சாராயம்மற்றும் இந்தியாவில் தயாரிக்கப்படும் வெளிநாட்டுமது வகைகளின் மொத்த விற்பனையை அரசு தன் பொறுப்பில் எடுத்துக் கொண்டு, 1-6-1983முதல் இந்த நிறுவனத்திடம் அந்த உரிமையை ஒப் படைத்தது.

இவ்வாறு ஆளுநர் கூறினார்.

# வீடியோவில் சென்சார் ஆன படங்களையே காட்ட வேண்டும்

## அமைச்சர் ஆர். எம். வீ. பேச்சு

திருச்சி, பிப். 14- வீடியோவில் சென்சார் செய்யப்பட்ட படங்களையே காட்டவேண்டும் என்று அமைச்சா ஆர்.எம்.வீ. கூறினார்.

அமைச்சர் ஆர்.எம்.வி திருச்சியில் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:

வீடியோ பார்லர் உரிமையாளர்கள் டெலிவிஷன் திரைமூலம் படங்களை திரையிடுவதற்கு உடனடியாக அனுமதிபெற வேண்டும்.

வீடியோ லைப்ரரி வைத்திருப்பவர்கள்மார்ச் 15-ம் தேதிக்குள் அனுமதி பெற வேண்டுமென்றுசென்னை உயர் நீதிமன்றம் உத்திரவிட்டுள்ளது.

வீடியோ பார்லர்களில் சினிமா சட்டவிதிகள் படி பொது மக்களுக்கு திரையிட தகுதி பெற்றவை என சான்றிதழ் வழங்கப்பட்ட (சென்சார் செய்யப்பட்ட) படங்களையே திரையிட வேண்டும். அரசு சட்ட திட்டத்திற்கு உட்பட்டு அரசு நிர்ணயிக்கும் இடங்களில்தான் வீடியோ சினிமா காட்டப்பட வேண்டும்.

ஒரு நாளைக்கு 4காட்சிகளுக்கு மேற்படாது திரையிடவேண்டும்.

அரசு நிர்ணயித்துள்ள கட்டணத்தைவிட கூடுதல் கட்டணம் வாங்கும் திரையரங்குகள் மீது கேளிக்கை வரி சட்ட விதிகளின் படி நடவடிக்கை எடுக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

106-வது வட்டத்தில்

# அமைச்சர் குழந்தைவேலு பேசுகிறார்

சென்னை, பிப். 14— சென்னை 106- வது வட்டம் சார்சாக மாபெரும் கழகப் பொதுக்கூட்டம் இன்று (செவ்வாய்க் கிழமை) 14 ந்தேதி மாலை 7 மணி அளவில் மாடல் பள்ளி சாலையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் அமைச்சர் குழந்தைவேலு கலந்துகொண்டு சிறப்புரை யாற்றுகிறார். ப. அங்கமுத்து எம் எல்.சி, ஐசரிவேலன், சி. வி. ஆடலழகன், மதுரை இளவரசன் குணசேகரன், கஜேந்திரன், ஆரோக்கியதாஸ் மற்றும்பலர் பேசுகின்றனர்.

106வது வட்ட எம்.ஜி. ஆர். நற்பணி மன்றம் கூட்ட ஏற்பாட்டை செய்துள்ளது.

ஆறாவது

# ஐந்தாண்டு திட்டத்தில் 2 லட்சம் வீடுகள்

6, வது ஐந்தாண்டு திட்டத்துல் 2லட்சம் வீடுகளைக்கட்ட தமிழகஅரசு திட்டமிட்டுள்ளது என்று ஆளுனர்குரானாசட்டசபைக் கூட்டுக் கூட்டத்தில் கூறினார். அவர் கூறியதாவது:-

ஆறாவது திட்டக் காலத்தில், கிராம வீட்டு வசதி திட்டத்தின் கீழ் இரண்டு இலட்சம் வீடுகளைக் கட்டுவதற்குரிய திட்டம் ஒன்றை மாநில அரசு மேற்கொண்டுள்ளது என்பதை உறுப்பினர்கள அறிவர்.

1982 83ஆம் ஆண்டில் 40.000 வீடுகள் கட்ட வேண்டுமெனத் திட்டமிட்டிருக்க, 40, 092 வீடுகள் கட்டப்பட்டுள்ளன.

நடப்பாண்டில், அக்டோபர் இறுதி வரையில் 17,894 விடுகள் கட்டப்பட்டுள்ளன.

அவற்றில் ஆதிதிராவிடர்களுக்காக 15,058 வீடுகள் கட்டப்பட்டுள்ளன. 20,759வீடுகளைக்கட்டும் பணி வெவ்வேறு நிலைகளில் உள்ளது

ஒரு வீட்டின் கட்டுமான மதிப்பீட்டுச் செலவு நடப்பு நிதி ஆண்டுத் தொடக்கத்திலிருந்து ரூ. 4,000திலிருந்து ரூ 6,000 ஆக உயர்ந்துள்ளது

இவ்வாறு ஆளுநர் கூறினார்.

# 1985ம் ஆண்டு மார்ச்சுக்குள் எல்லா குடியிருப்புகளுக்கும் குடிநீர்

# 75 நகரங்களுக்கு ரூ. 1 9.42 கோடியில் குடிநீர்த் திட்டம்

## ஆளுநர் குரானா அறிவிப்பு

சென்னை, பிப். 14- கோவை. சேலம், மதுரை உட்பட 75 நகரங்களுக்கு ரூ. 149 42 கோடியில் குடிநீர் திட்டம் தயாரிக்கப்படுவதாகவும் இத்திட்டம் நாலரை ஆண்டில் முடிவு அடையும் என்றும் ஆளுநர் குரானா கூறினார்.

எல்லா குடியிருப்புகளுக்கும் அடுத்த ஆண்டுமார்ச்சுக்குள் குடிநீர் வழங்கப்படும என்றும் அறிவித்தார்.

குடிநீர் திட்டங்கள் குறித்து ஆளுநர் உரையில் குறிப்பிட்டுக் காட்டினார்.

புதிய குடிநீர் திட்டங்கள் குறித்து சட்டசபைக் கூட்டததில் ஆளுநர் குரானா கூறியதாவது:-

கிராமப்புற மக்களுக்குப் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கும் திட்டத்திற்கு அரசு முன்னுரிமை அளிதது வந்துள்ளது.

1976-77ஆம் ஆண்டில் எடுக்கப்பட்ட புள்ளி விவரக் கணக்குப்படி இம்மாநிலத்தில உள்ள47,273குடியிருப்புப் பகுதிகளில் 18,167 குடியிருப்புப் பகுதிகள் குடிநீர் பிரச்சினையுள்ள குடியிருப்புப் பகுதிகளாக வகைப் படுத்தப்பட்டுள்ளன கடந்த ஆண்டுகளில் பருவமழை பொய்த்ததன் காரணமாக குடிநீர்ப்பிரச்சினையுள்ளகிராமங்களின் எண்ணிக்கை மேலும் அதிகரித்துள்ளது.

1985மார்ச் இறுதிக்குள் இந்த குடியிருப்புப் பகுதிகளுக்குக் குடிநீர் வழங்கப் படுமென்று நம்பப்படுகிறது.

## உலக வங்கி நிதியுதவி

உலக வங்கியின் நிதி உதவியுடன் குடிநீர் வழங்குதல், மற்றும் குறைந்த செலவிலான துப்புரவுப் பணித் திட்டததை மேற்கொள்ள திட்டமிடப்பட்டுள்ளது

இத் திட்டத்தின் கீழ் கோயம்புத்தூர், சேலம் மதுரை ஆகிய மூன்று பெரு நகரங்களுக்கும்ஏனைய75நகரங்களுக்கும் 740 கிராமக்குடியிருப்புப் பகுதிகளுக்கும் குடி நீர் வழங்கும் திட்டங்களும் 14 நகராட்சிகளுக்கு குறைந்த செலவில் துப்புரவு வசதி அளிக்கும் திட்டமும் மேற்கொள்ளப்படும் ரூ. 149. 42 கோடி செலவில் செயலாக்கப்பட விருக்கும் இத்திட்டம் நாலரை ஆண்டுகளில் முடிவடையும்.

பெரியார், கோயம்புத்தூர் மாவட்டங்களில் தண்ணீரில் அதிக ஃப்ளுரைட் உள்ள 726 குடியிருப்புப் பகுதிகளுக்குகுடிநீர் வழங்கும் ஒரு திட்டத்திற்கு நிதியுதவி அளிக்க ஐரோப்பிய பொருளாதாரக் குழு ஒப்புக் கொண்டுள்ளது.

இத்திட்டம் ரூ. 15 20 கோடி மதிப்பீட்டுச் செலவில் 30 மாதங்களில் நிறைவேற்றப்படும் என எதிர்பார்க்கப்படுகிறது.

இவ்வாறு ஆளுநர் கூறினார்.

சட்ட மன்றக் கூட்டுக் கூட்டம் நேற்று தொடங்கியது.

ஆளுநர் தனது உரையைப் படிக்கத் துவங்கு முன்பு மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு சங்கரய்யாஎழுந்து ஏதோ ஒரு அறிக்கையை சபையில் படித்து விட்டு தங்கள் கட்சிவெளிநடப்பு செய்வதாக கூறிவிட்டு வெளிநடப்பு செய்தார்.

அதே போல் நெடுமாறனும் இந்திய கம்யூனிஸ்டு மாணிக்கமும் கூறிவிட்டு வெளி நடப்பு செய்தனர்.

பின்னர் ஆளுநர் குரானா காலை 10.04 மணிக்கு உரை யாற்றத் தொடங்கினார்.

## குரானா தமிழ்ப் பேச்சு

ஆரம்பத்தில் தமிழில் ''மதிப்பிற்குரிய சட்டமன்ற உறுப்பினர்களே, உங்கள் அனைவருக்கும் புத்தாண்டு வாழ்த்துக்களை முதற்கண் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்புத்தாண்டில் நம் மாநிலத்தின் பொருளாதாரம் எல்லா வகையிலும் மேலும்வளம்பெறும் என்று உளமார நம்புகிறேன் என்று கூறினார்.

உறுப்பினர்கள் அவரது தமிழ் பேச்சினை மகிழ்ச்சியுடன் ஆரவாரம் செய்து வரவேற்றனர்.

## சபாநாயகர் படித்தார்

அதை தொடர்ந்து 27 பக்கம் கொண்ட ஆங்கில உரையை 10 55 மணிக்கு படித்து முடித்தார்.

ஆளுநர் உரையின் தமிழ் உரையை சபாநாயகர் ராசாராம் தொடர்ந்து படித்தார்.

31 பக்கம் கொண்ட உரையை 11.41 மணிக்கு சபாநாயகர் ராசாராம் படித்து...

(6ம்பத்தி தொடர்ச்சி)

பாராட்டும் தெரிவிப்பதாக சங்க செயலாளர் சண்முகம், தலைவர் தினகரன், மற்றும் நிர்வாகிகள் தெரிவித்துள்ளனர்.

## குடிநீர் வாரிய அண்ணா பணியாளர்

அரசு ஊழியர்களுக்கு ஒய்வு பெறும் சமயம் ரூ10 ஆயிரம் வழங்கவும் 4-வது ஊதியக் குழு அமைத்தல் ஆகியவற்றையும் அறிவித்த முதல்வர் புரட்சித்தலைவருக்கு தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரிய அண்ணா பணியாளர்கள் சார்பில் சங்க பொதுச் செயலாளர் பெ.ராசேந்திரன் ஓர் அறிக்கையில் நன்றி தெரிவித்துள்ளார்.

தமிழகத்தில் இதுவரை யாரும் செய்யாத சாதனையை முதல்வர் புரட்சித்தலைவர் செய்துள்ளார். புரட்சித்தலைவர் அரசுக்கு ஆதரவாக வாரியஊழியர்கள் துணை நிற்பார்கள் என்றும் ராசேந்திரன் கூறியுள்ளார்.

# புகளூர் காகித ஆலை: செப்டம்பருக்குள் கட்டுமானப் பணிகள் முடிவடையும்

ரூ. 195 கோடி செலவிலான காகித ஆலையின் அனைத்துப் பணிகளும் இந்த ஆண்டு செப்டம்பர் அக்டோபருக்குள் முடிவடையும் என்று ஆளுநர் குரானா சட்டசபைக் கூட்டுக் கூட்டத்தில் கூறினார்.

ஆளுநர் கூறியதாவது:-

தொழில் வளர்ச்சியை ஊக்குவிக்கும் வகையில் இம்மாநில அரசு அளித்துள்ள பல்வேறு சலுகைகள் வசதிகளைத் தவிர பெரும் செலவில் பொதுத் துறைத் தொழில்களை ஏற்படுத்தவும் நடவடிக்கைகள்மேற்கொள்ளப்பட்டுள்ளன.

செற்கற்பட்டு மாவட்டம் திருவாலங்காட்டில் சுமார்ரூ10கோடிசெலவில் அமைக்கப்பட்டு வரும் திருத்தணி கூட்டுறவுச் சர்க்கரை ஆலை, இவ்வாண்டு ஏப்ரல் மத்தியில் செயல்படத் தொடங்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

பெருமளவில் ஆட்குறைப்புச் செய்யப்படுவதை தவிர்ப்பதற்காகவும் பணி செம்மையாக நடைபெறுவதை உறுதி செய்வதற்காகவும் மதுரை மாவட்டதில் உள்ள மதுரா சுகர்ஸ் நிறுவனத்தின் நிர்வாகத்தை மாநில அரசு தன் பொறுப்பில் எடுத்துக் கொண்டுள்ளது.

மாநில அரசால் ஏற்படுத்தப்பட்ட தமிழ்நாடு பத்திரிகை காகிதம்—பிற காகித ஆலை நிறுவனம், திருச்சி மாவட்டத்தின் பின் தங்கிய பகுதியானபுகளூரில் பத்திரிகைகாகிதம் பிறகாகித ஆலை ஒன்றை அமைத்து வருவதை உறுப்பினர்கள் அறிவர்.

ரூ.195 கோடி செலவிலான இத்திட்டத்திற்கு, உலக வங்கி, திட்டச்செலவில் 50 சதவீதத்தை ஏற்கிறது.

ஆண்டு ஒன்றிற்கு50,000 டன் பத்திரிகைக் காகிதத்தையும், 40,000 டன்பிற காகிதத்தையும் உற்பத்தி செய்யும் வகையில் தயாரிக்கப்பட்டுள்ள இத்திட்டம் செயல்படத் தொடங்கியவுடன் ஆண்டொன்றுக்கு ரூ 40 கோடி அளவிற்கு அந்நியச்செலாவணியை மிச்சப்படுத்தும்

இத்திட்டத்தின் கட்டுமானப்பணிகள் நடந்தேறி வருகின்றன. திட்டமிட்டுள்ளவாறு, நடப்பு ஆண்டின் செப்டம்பர் - அக்டோபருக்குள் இத்திட்டத்தின் அனைத்துப் பணிகளும் முடிவடையும் என எதிர்பார்க்கப்படுகிறது.

சென்னையில் வரிக் கட்டுப்பாடற்ற வணிக மண்டலம் ஒன்றை ஏற்படுத்துவதற்கான செயற்குறிப்பிற்கு மத்திய அரசு அண்மையில் ஒப்புதல் அளித்துள்ளது.

அரசுக்குச் சொந்தமான 150 ஏக்கர் நிலம் இம்மண்டலத்தை அமைக்க தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

இப்பகுதியின் மேம்பாட்டுப் பணி மாநில தொழில் மேம்பாட்டு நிறுவனத்திடம் (சிப்காட்) ஒப்படைக்கப்பட்டுள்ளது,

பாம்பன் பாலப்பணி விரைவில் மறுபடி ஆரம்பிக்கப்படும். இராமேஸ்வரம் தீவின் முனையில் இருக்கும் தனுஷ்கோடி வரை தடங்கலற்றசாலைப் போக்குவரத்து வசதியை இப்பாலம் ஏற்படுத்தும். இப்பணிக்கு இப்போது ரூ. 16.65 கோடி செலவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இவ்வாறு ஆளுநர் கூறினார்.



சிம்சன் வேலை நிறுத்தம்

வாபஸ் பெறப்பட்டால்

## விசேஷ தொழில் நீதி மன்றம்

சென்னை, பிப். 14— சிம்சன் பிரச்சினை குறித்து அமைச்சர் ராகவானந்தம் முன்னிலையில் கடந்த 12-ந் தேதி பேச்சு வார்த்தைநடந்தது தெரிந்ததே.

பேச்சுவார்த்தையின் போது அரசின் சார்பில், வேலை நிறுத்தம் பின் வாங்கப்பட்டால், உடனடியாக விசேஷ தொழில் நீதிமன்றம் நியமிக்கவும் அந்த நீதிமன்றம் 6 மாத காலத்தில் எல்லா பிரச்சினைகளைப் பற்றியும் தீர்ப்பு வழங்கவேண்டும் என்று உத்தரவு பிறப்பிப்பதாகவும் வலியுறுத்திக் கூறப்பட்டது. இது குறித்து தன்னுடைய கருத்தைகூற ஒரு நாள் அவகாசம் வேண்டும் என குசேலர் கூறினார்.





# ரூ.10 ஆயிரம் வழங்கவகைசெய்த புரட்சித்தலைவருக்கு அரசு ஊழியர்கள் மாலை அணிவித்தனர்

**சென்னை, பிப். 14. தமிழக அரசு ஊழியர்கள் ஓய்வுபெறும் போது பத்தாயிரம் ரூபாய் வழங்கும் திட்டத்தை அறிவித்த முதல்வர் புரட்சித்தலைவருக்கு அரசு ஊழியர்கள் மாலை அணிவித்து நன்றி தெரிவித்தனர்.**

தமிழக அரசு தனது ஊழியர்கள் ஒய்வு பெறும் போது 10 ஆயிரம் ரூபாய் பெறும் வகையில் சிறப்புமிக்க திட்டத்தை ஆளுனர் உரையில் அறிவித்தது.

அதையொட்டி சட்டசபையில் ஆளுனர் உரை முடிந்தவுடன் அரசு ஊழியர் சங்கங்களின்பிரதிநிதிகள் முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்து கைத்தறி ஆடைகளும் மாலைகளும் அணிவித்து நன்றி தெரிவித்தனர்.

தமிழ்நாடு அரசு அலுவலர் கழகசி மற்றும் டி பிரிவு மாநில தலைவர் எம். வி, லட்சுமி நரசிம்மன் மற்றும் மாநில நிர்வாகிகள் முதல்வர் புரட்சித்தலைவருக்கு கைத்தறி ஆடைகளை அணிவித்து நன்றி தெரிவித்துக் கொண்டனர்.

அரசு அலுவலர்கழகமாநிலத் தலைவர் எம். வி. லட்சுமி நரசிம்மன் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

அரசு ஊழியர்கள் மற்றும் அதிகாரிகள் மனம் மகிழத்தக்க அளவில் இக்கழகம் நம்பிக்கையுடன் எதிர்நோக்கிய ஒய்வுபெற்றால் 10 ஆயிரம் ரூபாய், நான்காவது ஊதியக் குழு ஆகிய சலுகைகளை ஆளுநர் உரையில் அறிவித்தமைக்கு தமிழக அரசிற்கும் முதல்வர் புரட்சித் தலைவருக்கும்- நிதியமைச்சர் நாவலருக்கும் இக்கழகம் நெஞ்சு நெகிழ்ந்த நன்றியினை காணிக்கையாக்குகின்றது.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

## சிவ. இளங்கோ நன்றி

என்.ஜி.ஓ,சங்கத் தலைவர் சிவ, இளங்கோ ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

அரசு ஊழியர்கள் 8 லட்சம் பேரின் நீண்டநாள் கோரிக்கைதான் ஒய்வு பெறும்போது கணிசமான கூடுதல் நிவாரணம்-கருணைக் கொடை அளிக்க வேண்டுமென்பது. அந்த 9 ஆண்டுகோரிக்கைநிறைவேற்றப்பட்டதை இன்று ஆளுநர் உரையின் மூலம்- தமிழக அரசும் அதன் பெருமைக்குரிய முதல்வருமான எம்.ஜி.ஆர். அவர்களும் அறிவித்திருப்பதன் மூலம் நாங்கள் மட்டிலாத மகிழ்ச்சி அடைகிறோம்.

இதுபோன்ற ஒரு திட்டம் மாநில அரசு ஊழியர்களுக்காக இந்தியாவிலேயே முதன் முதலாக தமிழ்நாட்டில் தான் அறிமுகப்படுத்தப் படுகிறது என்பதில் நாம் மகிழ்ச்சியடையலாம். நமது அரசை எண்ணிப் பெருமைப்படலாம் சத்துணவுத் திட்டத்தில் தமிழக முதலமைச்சர் எம். ஜி. ஆர். எப்படி இந்தியாவிற்குப் புது வழி காட்டினாரோ, அதே போல ஒய்வுபெறுவோருக்குக் கணிசமான நிவாரணமளிக்கவும் இப்போது முதல்வர் வழிவகை கண்டுள்ளது மன நிறைவோடு பாராட்டத்தக்கது. அரசுக்கு நிர்வாகச் செலவினங்கள் எவ்வளவோ இருப்பினும் - அரசு அலுவலர்களுக்கும் தன்னாலியன்ற நன்மைகளைச் செய்யவேண்டும் என்ற பேருள்ளத்தோடு இத்திட்டத்தினால் ஆண்டு ஒன்றுக்கு அரசுக்கு ரூபாய் 8 கோடியும் அதற்கு மேலும் செலவானாலும் செய்திருக்கின்ற பான்மையை மனம்விட்டுப் பாராட்டியாக வேண்டும்.

## செங்கை, தர்மபுரி

அரசு அலுவலர் கழக செங்கை மாவட்ட தலைவர்பி.செல்வராஜ், தர்மபுரி மாவட்ட தலைவர் கே, சோமசுந்தரம் ஆகியோர் விடுத்துள்ள அறிக்கையில் அரசு அலுவலர்களின் கோரிக்கையை ஏற்று 10 ஆயிரம்ரூபாயை வழங்கியதுடன் முன்னதாக பணியிலிருந்து ஓய்வுபெற விரும்புபவர்களுக்கு 5ஆயிரம் ரூபாய் வழங்க முன் வந்துள்ள முதல்வர் புரட்சித்தலைவருக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறோம் என தெரிவித்துள்ளனர்.

## தேசிய ஒன்றியம்

மாநில அரசு ஊழியர் தேசிய ஒன்றியத்தலைவர் மு. அமீர்பாட்சா விடுத்துள்ள அறிக்கையில் அரசு அலுவலர்களுக்கு 10ஆயிரம் ரூபாய் வழங்கிய முதல்வர் புரட்சித்தலைவருக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம் என கூறியுள்ளார்.



காலஞ்சென்ற முன்னாள் எம். எல். ஏக்களுக்கு

## சட்டசபையில் அனுதாபம்

சென்னை, பிப். 14— தமிழக சட்டசபையில் உறுப்பினர்களாக இருந்த பி.ரெங்கசாமிரெட்டியார் எஸ். சிவசுப்பிரமணியம், ஜி நாராயணசாமிநாயுடு, எஸ். சங்கிலி வி பாஷ்யம் ரெட்டி, பஷீர் அகமது சையத் ஆகியோரது மறைவு குறித்து சட்டமன்றத்தில் இரங்கல் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மறைந்தவர்களின் வாழ்க்கைக் குறிப்புகளையும் அவர்களின் சிறப்பான சேவைகளையும் பேரவைத்தலைவர் ராசாராம் அவையில் படித்தார். அதன் பிறகு அவை உறுப்பினர்கள் இரண்டுநிமிடம் மௌனம் கடைப்பிடித்து அஞ்சலி செலுத்தினர்.



சட்டசபையில் கவர்னர் உரை:

# 20 அம்சத்திட்டத்தை சிறந்த முறையில் அமுலாக்கும் தமிழகம்

## மத்திய திட்டக்குழு பாராட்டு

**சென்னை, பிப். 14- இருபதுஅம்ச திட்டத்தை நிறைவேற்றுவதில் தமிழக அரசு தலைசிறந்து விளங்கியது என்று மத்திய திட்டக்குழு பாராட்டியுள்ளது.**

சட்டசபை கூட்டுக் கூட்டத்தில் ஆளுநர் குரானா இதைக் குறிப்பிட்டு கூறியதாவது:-

1982-83 ஆம் ஆண்டில் 20 அம்சத் திட்டத்தை நிறைவேற்றுவதில் தமிழக அரசு தலைசிறந்து விளங்கியது என்று மத்தியத்திட்டக்குழுபாராட்டியுள்ளதை உறுப்பினர்கள் அறிவர்.

இதே முறையில் நடப்பாண்டிலும் இத்திட்டங்கள் நிறை வேற்றப்பட்டதன் பயனாக, எண்ணெய் வித்துக்கள் உற்பத்தி, கிராம வேலை வாய்ப்புத் தேசியத் திட்டத்தின் கீழ் உருவாக்கப்பட்ட வேலை நாட்கள், நிலமற்றவர்களுக்கு நிலம் வழங்குவதற்காக எடுத்துக்கொள்ளப்பட்ட உபரி நிலம், வறுமைக் கோட்டினைத் தாண்ட பழங்குடியினருக்கு உதவி யளித்தல், கிராமங்களுக்குக் குடிநீர் வழங்குதல், ஏழைகளுக்கு வீட்டுமனைகள் வழங்குதல், மரங்கள் நடுதல், கரிமஎரிவாயு தயாரிப்புச் சாதனங்கள் அமைத்தல், செய்யப்பட்ட கருத்தடை அறுவைசிகிச்சைகளின் எண்ணிக்கை, தொடக்கச் சுகாதார நிலையங்கள் அமைத்தல், ஒருங்கிணைந்த குழந்தைகள் வளர்ச்சித் திட்டத்தின் கீழ் செயல்பாடு, 6—14 வயதுத் தொகுதியிலுள்ள சிறார்களைப் பள்ளியில் சேர்த்தல், முதியோர்கல்வித் திட்டத்தின் கீழ் பயனடைந்தவர்கள் ஆகிய அம்சங்களில், நடப்பாண்டிற்கான இலக்கில் 70 சதவீதத்தை ஏற்கனவே அடைந்துவிட்டது.

இவ்வாறு ஆளுநர் குரானா கூறினார்.

சலுகைகள் வழங்கிய

# புரட்சிதலைவர் அரசுக்கு பல்வேறு அரசு ஊழியர்கள் சங்கம்நன்றி

**சென்னை பிப். 14. அரசு ஊழியர்களுக்கு ஓய்வு பெறும் போது 10 ஆயிரம் ரூபாய் வழங்கவும் 4வது ஊதியக் குழு நியமனம் போன்ற சலுகைகளை அறிவித்தபுரட்சித்தலைவர்அரசுக்கு பல்வேறு அரசு ஊழியர் சங்கங்கள் நன்றியும் பாராட்டும் தெரிவித் துள்ளன.**

அரசு ஊழியர்களுக்கு ஒய்வு பெறும்போது ரூ 10 ஆயிரம் வழங்கவும், ஊதியக் குழு நியமிக்க உறுதியளித்த முதல்வர்புரட்சித்தலைவர் அரசைப் பாராட்டி தமிழ்நாடு தொடக்கப் பள்ளிஆசிரியர் இணைப்பு இயக்கம நன்றி தெரிவித்துள்ளது அதன் மாநில பொதுச்செயலாளர் குகானந்தம் விடுத்துள்ள அறிக்கையில் அரசு ஊழியர்களுக்கு சலுகைகள் வழங்கியுள்ள முதல்வர் புரட்சித்தலைவருக்கு தனது இயக்க சார்பில் நன்றி தெரிவிப்பதாக கூறியுள்ளார். இது வரலாற்றில் பொன் எழுத்துக்களால் குறிப்பிடத்தக்கது என்றும் அவர் கூறியுள்ளார்.

அரசு பணியாளர்கள் ஒய்வுபெறும் போது ரூ.10 ஆயிரம் வழங்கவும், 4வது ஊதிய ஆணைக்குழு அமைக்கவும்உறுதியளித்த முதல்வர் புரட்சித் தலைவருக்கு தமிழ்நாடு அரசு அடிப்படை பணியாளர்கள் மாநில மத்திய சங்கம்(சி அண்ட் டியுடன் இணைக்கப்பட்டது.) தனது இதயப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறதென்று அதன் மாநில பொதுச்செயலாளர் ஏ. ஆர். சுந்தர்ராஜி, துணைத்தலைவர் தங்கவேலு ஆகியோர் கூறியுள்ளனர்.

தமிழ்நாடு அரசு அலுவலர் கழகம் அறிஞர் அண்ணா இந்திய மருத்துவமனை தொழிலாளர்கள் சங்கம் அரசு ஊழியர்களுக்கு சலுகைகள் வழங்கியதற்காக முதல்வர் புரட்சித் தலைவருக்கு நன்றியும் பாராட்டும்தெரிவிப்பதாக அதன் பொதுச் செயலாளர் சம்பத்குமார் மற்றும் நிர்வாகிகள் தெரிவித்துள்ளனர்.

அரசு ஊழியர்களுக்கு சலுகைகளை அறிவித்த முதல்வர் புரட்சித் தலைவருக்கு நன்றியும், பாராட்டும் தெரிவிப்பதாக தமிழ்நாடு கூட்டுறவுத் துறை அலுவலர் கழகம் (சி & டியுடன் இணைக்கப்பட்டது) தெரிவித்துள்ளது.

கிருஷ்ணகிரியில் நடந்த

## கழகப் பொதுக் கூட்டம்

கிருஷ்ணகிரி, பிப். 14 கிருஷ்ணகிரி ஒன்றியம் ஆலப்பட்டிகாலனியில் கழகப் பொதுக்கூட்டம் நடந்தது.

செல்லன் தலைமையிலும், செல்லப்பன், எஸ். சாமண்ணன், சி.புட்டன், பாப்பண்ணன், முன்னிலையிலும் டாக்டர்ராசன், ஜி, எம்.முனிசாமி, கே. முனிசாமி வரவேற்புரையில் நடந்த இந்த கூட்டத்தில் கழஞ்சூர் செல்வராஜ், கே. ஆர். சின்னராசு எம். எல். ஏ. கோ, சமரசம் எம், எல். ஏ. எம், கண்ணப்பன், எம், ராமன், கே கிருஷ்ணன். முனி வெங்கட்டப்பன், எம். ஜெயவேல், எம்.முனியன் கருமலை அரங்கநாதன், பைரீசன், பி. சாந்தம், கிருஷ்ணாச்சாரி, வி. வெங்கட்டப்பன், கு. சின்ன கண்ணன் மற்றும் பலர் கலந்துகொண்டு பேசினர்.

அறிஞர் அண்ணா அரசினர் இந்திய மருத்துவ மனை ஊழியர்கள் சங்கம் அரசு ஊழியர்களுக்கு சலுகைகள் வழங்கிய முதல்வர் புரட்சித் தலைவருக்கு நன்றியும்

(1-ம் பத்தி பார்க்க)